[18th February 1961

THE HON. SRI M. A. MANICKAVELU : அவுட்-பேஷண்ட் டிபார்ட்மென்டுக்காக வேறு ஒரு புதுக் கட்டிடம் கட்டும் வேலை நடந்துகொண்டிருக்கிறது. அது பூர்த்தி ஆனதும் 12 படுக்கைகளுக்கு அங்கு ஏற்பாடு ஆகும். அது தவிர, 12 படுக்கைகள் அதிகமாக ஏற்படுத்துவதற்கும் திட்டம் இருக்கிறது.

பார்மஸிஸ்ட் நியமிக்கும் விஷயத்தில், 75 படுக்கைகளுக்கு ஒரு பார்மஸிஸ்ட், 100 அவுட்-பேஷண்டுகளுக்கு ஒரு பார்மஸிஸ்ட் என்ற முறையிலேதான் நியமனம் ஆகிறது. இந்த ஆஸ்பத்திரிக்கும் ஒருவர் இருக்கிறார். ஏதோ தற்காலிகமாக ஒருவர் இன்னொருவர் வேலையைப் பார்த்தால் யாராவது லீவில் போயிருக்கலாம், அல்லது வேறு காரணமாக இருக்கலாம்.

*Handloom goods*

* 374 *Q.*—SRI A. VEDARATHNAM : கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) கைத்தறி துணி ஏற்றுமதியை அதிகரிக்க வெளிநாடுகளுக்கு தூது கோஷ்டி அனுப்பும் உத்தேசம் அரசாங்கத்திற்கு உண்டா ?

(இ) அப்படியானல், யார் யாரைக்கொண்ட தூது கோஷ்டி எந்தெந்த நாடுகளுக்கு எப்போது அனுப்பப்படும் ?

(உ) எவ்வளவு காலம் தூது கோஷ்டியின் சுற்றுப்பிரயாணம் நீடிக்கும் ?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) No, Sir. Only recently a delegation returned after visiting South East Asian countries.

(*b*) & (*c*) Do not arise.

SRI A. VEDARATHNAM : சமீபத்தில் தூரக் கிழக்குப் பிரதேசத்தில் சுற்றுப் பிராயணம் செய்து வந்தார்களே, அதனுடைய பலன் என்ன என்பதைத் தயவுசெய்து அறிவிக்க முடியுமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : சிலோன், மலேயா, ஹாங்காங் போன்ற பிரதேசங்களில் எந்த அளவுக்குக் கைத்தறித் துணியை விற்க முடியும் என்று அந்தத் தூது கோஷ்டியினர் பரிசீலனை செய்தார்கள். அவர்கள் சில சிபார்சுகள் செய்திருக்கிறார்கள். அதில் சென்ற நான்கு பேர்களும் வியாபாரிகள். அதனால் அவர்கள் அங்கு விற்பனை செய்வதற்கான முயற்சிகளையும் செய்துவிட்டு வந்திருக்கிறார்கள். அவர்களுடைய ரிபோர்ட் பரிசீலனையில் இருக்கிறது.

SRI SOWDI S. SUNDARA BHARATHI : Will the Government consider the setting up of an organization to control and see that only standardized goods are exported and all goods not up to the standard are prevented from being exported?

18th February 1961]

THE HON. SRI R. VENKATARAMAN : We are living in a free and competitive economy and it is not possible to say that only certain kinds of goods should be exported. It is up to the buyers to get the goods marked by the Institute which we have here in Madras for marking cloth. We have a voluntary marking scheme and the importers should take care to get goods which are marked under the scheme. Then there will be less difficulty about the quality of the cloth exported.

SRIMATHI T. N. ANANDANAYAKI : *'பிளீடிங் மெட்ராஸ்' போன்றவைகளுக்கெல்லாம் நல்ல 'டிமாண்டு' அமெரிக்காவில் இருக்கிறதென்று சொல்கிறீர்களே, அதனால் அமெரிக்காவுக்கு ஏன் ஒரு தூதுகோஷ்டி அனுப்பக்கூடாது?*

THE HON. SRI R. VENKATARAMAN : *அமெரிக்காவுக்கு தூது கோஷ்டி போய் வந்தார்கள். அதன்பின் தான் 'டிமாண்டு' ஏற்பட்டது. ஆனால், தரம் குறைந்த துணியை அனுப்பி அந்த டிமாண்டை இப்பொழுது நாம் குறைத்துவிட்டோம்.*

SRI M. R. KANDASWAMI MUDALIYAR : *நம் நாட்டிலே மிகப் பெரிய குடிசைத் தொழிலாக கைத்தறித் தொழில் இருப்பதாலும், அந்தத் தொழிலை நம்பி பெரும்பாலான தொழிலாளிகள் இருப்பதாலும், இந்தத் தொழிலை முன்னேற்ற வேண்டி, வெளி நாடுகளுக்கு தூது கோஷ்டி அனுப்பி, எந்த எந்த நாடுகளில் நம்முடைய கைத்தறி துணிக்குக் கிராக்கி இருக்கிறதென்று தெரிந்து, அந்தந்த இடங்களில் உடனடியாக மார்க்கெட் ஏற்படுத்திக் கொடுக்க ஏன் அரசாங்கம் முன்வரவில்லை? சமீபத்தில் வெளியே சென்று வந்தவர்கள், நம் துணிக்கு சிலோன் போன்ற இடங்களில் நல்ல கிராக்கி இருக்கிறதென்று சொல்லியிருந்தும், உடனடியாக அவ்விடங்களுக்கு தூது கோஷ்டி அனுப்பாமலிருக்கக் காரணம் என்ன?*

THE HON. SRI R. VENKATARAMAN: *நான் சொன்ன பதிலைக் கனம் அங்கத்தினர் புரிந்துகொள்ளவில்லை. தூது கோஷ்டி சென்று வந்து இன்னும் இரண்டு மாதம்கூட ஆகவில்லை. அடிக்கடி தூது கோஷ்டி அனுப்புவதினால் வியாபாரம் ஆகாது. விற்பனை செய்வதற்கு முக்கியமாக தரம் நன்றாக இருக்க வேண்டும். தரம் சரியாகக் காப்பாற்றப்படாததால் தான் நமது வியாபாரம் கொஞ்சம் பாதிக்கப்படுகிறது.*

*Cleanliness Day.*

* 375 *Q.*—SRI S. M. ANNAMALAI : *கனம் ரெவின்யூ அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—*

*(அ) 1960 அக்டோபர் 2-ந் தேதியில் Cleanliness Day கொண்டாடும்படி மத்திய சர்க்கார் மாநில சர்க்காரைக் கேட்டுக்கொண்டார்களா?*